உ

பூவாளூர்

# அருள்தரு குங்கும சுந்தரி அம்மை

## பதிகம்

29.10.2000



பூவாளூர் அறுவை வாணிகர்

அமரர் **சு. கந்தசாமி செட்டியார்** அவர்களின்

நினைவாக

இவர் குடும்ப வெளியீடாக மலர்வது


ஆசிரியர் :

வித்துவான். **க. கதிரேசன்** எம்.ஏ., பி.எட்.,

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்

பூவாளூர்.



வெளியிடுதல் :

**க. முத்துக்குமரன்** பி.எஸ்சி.,

மேலாளர் I, விதை சுத்திகரிப்பு நிலையம்

கள்ளக்குறிச்சி - 606 202.

## திரிசிரபுரம், மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின்

## பூவாளூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி

திருவார்பொற் பூவாளூர்ப் பங்குனிமா நதிக்கரையின்
தெனாது வைப்பில்
தருவார்கூ விளவனத்துக் குங்குமசுந் தரிஒருபால்
தயங்க வைகும்
குருஆரும் சடைமோலித் திருமூல நாதர்பதம்
குறித்து வாழ்த்தின்
கருவார்வெம் பவக்கடல்நீந் திடலாகும் இவ்வுரைமெய்
காண்பாய் நெஞ்சே

-பா1-

ஆலம்விடம் அமுதாக்கும் காமர்பதித் திருமூல
அமல னார்க்குச்
சாலுமணிக் குழைஒருபால் தோடுஒருபால் முத்துஒருபால்
சர்ப்பம் ஓர்பால்
ஏலுநற்குங் குமம்ஒருபால் நீறுஒருபால் பட்டுஒருபால்
இயைதோல் ஓர்பால்
ஒலிடுபொற் சிலம்புஒருபால் கழல்ஒருபால் பன்னாளும்
ஒளிரு மன்றே

-பா4-

பொருந்துசன் மார்க்கம் நெடும்சக மார்க்கம்
புத்திர மார்க்கமும் இல்லேன்
திருந்திய தாத மார்க்கமும் இல்லேன்
தீவினை மார்க்கமே உடையேன்
கருந்தலைப் பூவை மூவர்பாட்டு எடுப்பக்
காமரு கிள்ளைகேட்டு உவக்கும்
பொருந்திய பொழில்சூழ் காமர்பூம் பதிவாழ்
பிஞ்ஞகா பேரருள் புரியே

-பா16-

காமர்பதி - பூவாளூர்

உ

# பூவாளூர்

# அருள்தரு குங்கும சுந்தரி அம்மை பதிகம்

பூவாளூர் அறுவை வாணிகர்

அமரர் **சு. கந்தசாமி செட்டியார்** அவர்களின்

நினைவாக

இவர் குடும்ப வெளியீடாக மலர்வது

ஆசிரியர் :

வித்துவான். **க. கதிரேசன்** எம்.ஏ., பி.எட்.,

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்

பூவாளூர்.

வெளியிடுதல் :

**க. முத்துக்குமரன்** பி.எஸ்சி.,

மேலாளர் I, விதை சுத்திகரிப்பு நிலையம்

கள்ளக்குறிச்சி - 606 202.

**29.10.2000**

## தோரண வாயில்

சிவமணம் கமழவிண்ட தொண்டர் மானதத் தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட பெருமாட்டி, பூவாளூர்த் திருத்தலத்தில் அருள்தரு திருமூலநாதப்பெருமானின் இடம் அமர்ந்த அருள்தரு குங்குமசுந்தரி அம்மையாக எழுந்தருளி அருள்பாலித்துக் கொண்டிருக்கிறாள். தண்ணார் கருணை தனை வழங்கும் தன்னேரில்லாத் தாய் இவள்.

இவ்வம்மையையும் அப்பனையும் நாளும் கனிந்து பணிந்து பேறு பெற்றவர்களுள் ஒருவர் எங்கள் தந்தையார் அமரர். **சு. கந்தசாமி செட்டியார்** அவர்கள். எங்கள் தாயார் திருமதி. **க. தெய்வானை அம்மாள்.** இவர்கள் தமிழ்த்தாத்தா உ.வே.சா அவர்களின் நெஞ்சில் நிறைந்த பூவாளூர் வித்துவான் தியாகராச செட்டியாரின் இனத்தவர் என்பது பெருமிதத்துக்குரியது. தந்தையார் 87 வயது வரை நலமுற வாழ்ந்தவர்; கொடுப்பதூஉம் குறைகொடாது, கொள்வதூஉம் மிகைகொளாது பகர்ந்து வீசிய அறுவை வணிகர்; எம் இனத்துக் காரியக்காரர்; செய்வன எல்லாம் செய்து மகிழ்வித்து மகிழ்ந்தசீலர். இவரின் நினைவாக இவர் குடும்பத்தினர் சார்பில் இப்பதிகம்- அருள்தரு குங்குமசுந்தரி யம்மை பதிகம் - மலர்கிறது.

இதனை ஆக்கியளித்தவர் எங்கள் மூத்த அண்ணனும், வணக்கத்துக்குரிய அருள்நெறித்தந்தை தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களுடன் 36 ஆண்டுகள் நெருங்கிப் பழகியவரும், அவர்களது குன்றக்குடி த.க.கு.மே.பள்ளியில் 35 ஆண்டுகள் தமிழாசிரியர் பணி செய்து பணிஒய்வுக்குப் பின்னர், குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப் புலவராக உள்ளவரும் ஆகிய வித்துவான். **க. கதிரேசன்** எம்.ஏ.,பி.எட்., அவர்கள்.

உள்ளம் கனிவிக்கும் இப்பதிகத்தை ஓதுகின்றவர் உள்ளக்கிழியில், அம்மை உருக்கொள்வாள். நெஞ்சக் கஞ்சமும், செஞ்சொல் தமிழ்க்கடலும் குடிகொண்ட காமர் பூங்கொடியாம் அம்மை, ஓதுகின்றவர் அனைவர்க்கும் தன் தண்ணருள் பொழிந்து, பல்வகை வளங்களும் நலங்களும் பாங்குற வழங்கி வாழ்விப்பாள். ஓதி உணர்ந்து உயர்வு பெறுவோம்.

வாய்ப்பளித்த திருவருளுக்கும் குருவருளுக்கும் வணக்கம்.

அன்புடன்

**க. முத்துக்குமரன்** பி.எஸ்.சி.,
மேலாளர் I, விதைசுத்திகரிப்பு நிலையம்.
கள்ளக்குறிச்சி - 606 202.

உ

## பூவாளூர் அருள்தரு குங்கும சுந்தரி அம்மை பதிகம்

உலகத் துயிர்கள் உய்திபெற
உயிராய் நிற்கும் எம்முயிரே
ஓங்கிப் பரந்து விரிந்தெவையும்
உள்ளே அடக்கும் பெருவானே
நலங்கள் யாவும் நயந்தளிக்க
நாடி எழுவான் செங்கதிரே
நாடும் விழிக்கும் மனதுக்கும்
நயமே கொழிக்கும் தண்ணிலவே
நிலவும் வளங்கள் நீடுபொறை
நிற்கும் நிலமே வளிதீயாய்
நீராய்ப் பரந்து கருணையதே
நிகழ்த்தும் குங்கும சுந்தரியே
பலவாய் யாம்கேள் வரம்பலவும்
பரிந்தே அளிக்க வருக! சிவன்
பாகம் பகிர்ந்த பூங்குயிலே
வருக வருக வருகவே. -1

நவமணி தம்மொடு வைரம் இழைத்த
நன்பொன் சிலம்போடு
நடைபயில் தோறும் கிண்கிணி பிறவும்
நலமே தாம்முழங்க
இவளுக் குண்டோ இலையோ என்னும்
இடைமே கலைமுரல
எழில்பெறு வளைகள் எழுந்தும் தாழ்ந்தும்
இனிமைக் குரல்எழுப்பத்
தவளத் தோள்வளை முத்து குலுங்கத்
தவழ்மா லைகள்எல்லாம்
தண்ணென எங்கும் தன்மணம் பரப்பித்
தாழ்ந்து தாழ்ந்தசையத்
துவளும் பூங்குழல் வண்டுகள் மேல்எழத்
தொடிவளைக் கைவீசித்
துங்கத் தாயே குங்கும சுந்தரி
தொழுதோம் வருகுவையே! -2

நாடெலாம் காத்ததுடன் நலமெலாம் செய்திட்ட
நல்லரசன் மஞ்சுளன்தன்
நயக்குமகள் பூங்கொடி நலமுற்ற காந்திமதி
நாடிய கல்விகேள்விக்
கோடெலாம் கொண்டதிரு முதுகுன்றப் பெருவணிகன்
சந்ரகுப் தன்தனக்குக்
கொள்கையுயர் காளையாம் கொண்பே ரழகனாம்
சந்ரகூ டப்பெயரினான்
ஆடெலாம் பெறுமவனை அணையஒரு சித்தராய்
அவர்மனம் முடித்திட்டவன்
அழகிஉன் உள்ஆளும் திருமூல நாதரென
அறிதலால் உனையடைந்தோம்
வீடெலாம் மங்கலம் வீறுடன் பொலிதர
விரைந்தருள் செய்தளிக்க
வெற்றிகள் சேர்த்திடக் குங்கும சுந்தரீ
விரைந்தெழுந் தருளுநீயே. -3

அண்ணலார் திருமூல நாதனார் தம்பாதப்
பொன்னஞ் சிலம்பெறிதலால்
அம்பொன் கொழித்துவரு பொன்னியின் கரையில்வீழ்ந்(து)
அங்குகங் கையைஅழைக்கத்
தண்மையுறு பொன்னியுடன் கங்கை கலத்தலால்
தழைத்தேறி வந்துபாய்ந்து
தலையசைத் தேயுள நெல்வளர் நிலமெலாம்
தக்கஅள வாகநின்று
புன்மைதரு களைஎதும் தலைஎடா வகைசெய்து
போற்றிப் புரந்தருளல்போல்
புகலரிய நின்கருணை புரிகின்ற எம்முளம்
புரந்துநின் கருணைபாய்ச்சி
நன்மைத்திறங்களை நாடொறும் நின்கொழுநன்
நன்களிக் கின்றதேபோல்
நலந்தரல் வேண்டியாம் நாடினம் நின்பாதம்
நயந்துநீ தருவைஇன்றே -4

நந்தணை வயல்கள்சூழ் பூவாளி யூரெனும்
நற்றலம் மேவியருளும்
நம்பிரான் திருமூல நாதரின் நல்இடம்
நயந்துறை கின்றதாயே
அந்தமில் நின்மார்பில் அணிபெறும் பொன்மாலை
அமைவுறும் வைரமெல்லாம்
அமிழ்தான நின்திரு முகத்தழகு தாம்காட்டி
அவிர்தலைக் காண்பதாலே
சுந்தரீ நின்னழகை நேர்நின்று சொந்தமாய்
யாமும்உட் கொள்ளவந்தோம்
துயரெலாம் தீரவும் துன்பங்கள் பாறவும்
சுகமெலாம் கொண்டுய்யவும்
வந்தனை செய்கிறோம் வாழ்விப்ப துன்கடன்
வந்(து)அணை எம்முளத்தும்
வடிவான வாழ்விலே வாழ்விக்கும் நின்னருள்
வழங்குக எமதுதாயே. -5

அன்பர்கள் நெஞ்சம் களிகொள ஆடும்
அம்தோ கைமயிலே
அண்டச ராசரம் இன்புற வாழ்ந்திடு
அழகுத வழ்முகிலே
நின்னருள் தனையே நீளநி னைப்பவர்
நினைவுக் கொருதேனே
நீடுபெ ருந்துயர் தீர்க்கள முந்திவண்
நிலவும் நல்லமுதே
உன்னைநி னைப்பவர் உள்ளொளி கொள்ள
உதிக்கும் செங்கதிரே
உலவாக் காலத்(து) உறுநோய் தீர்த்(து)ஒளிர்
ஒண்மைப் பெருமருந்தே
குன்றென நின்றஎம் குறைகள் தீர்த்தருள்
கொழித்திடு கற்பகமே
குங்கும சுந்தரித் தாயே நின்தாள்
குறியாக் கொளஅருள்வாய் -6

அம்பொன் பதித்த நவமணிகள்
அழகே விரியும் முடிபோற்றி
அந்திப் பிறையாய் ஒளிர்நுதலில்
அவிர்குங் குமதில கம்போற்றி
இம்பர் உயிர்கள் ஈடேற்றும்
எழிலார் கருணைக் கண்போற்றி
ஏற்பார் தமக்கு வாழ்த்தியம்பி
இன்பம் சேர்செவ் வாய்போற்றி
நம்பும் அடியார் சொல்கேட்க
நயக்கும் குழைசேர் செவிபோற்றி
நாளும் அபயம் வரதம்அளி
நளினச் செம்மைக் கரம்போற்றி
எம்மை ஆள எழுந்தருளி
இருக்கும் குங்கும சுந்தரிநின்
இணைதண் எழிலார் திருவடிஎம்
இதயத் திருத்தி அருள்போற்றி -7

சிவனது திருவுளம் மன்னுவை
சீர்தர அவனைஉள் கொள்ளுவை
சீவர்கள் யாவினும் உறைகுவை
சிறுபொருள் தம்முளும் நிறைகுவை
அவனிகள் யாவையும் ஆக்குவை
அனைத்துல கத்தையும் காக்குவை
அவையனைத் தையுமே அழிக்குவை
ஆர்இளைப் பாறவே மறைக்குவை
நவைஎலாம் தீர்த்தருள் செய்குவை
நாடும் ஓர்ஆற்றலின் வடிவினை
நலந்தர பலவுருக் கொள்ளுவை
நண்ணினர் தமைஎலாம் ஏற்றுவை
இவண் எமக்(கு) அருள்தர வந்தனை
இனிமைசேர் குங்கும சுந்தரி
எம்பிழை பொறுத்தெமை ஆண்டருள்
ஈடிலா நின்னருள் தந்தருள். -8

உன்னை உளங்கொண்டே ஓங்கு நிலைபெற்ற
உனது திருநாட்டின் நிலைகாணாய்!
ஓடி வரும்இமய ஆறு களில்வெள்ளம்
ஓங்கு நீர்ப்பஞ்சம் தென்னாட்டில்
தன்னை நினையாத கள்ளப் படையெடுப்பால்
தருக்கு வெடிப்புகளால் நல்லார்போல்
தாங்கு நிலைகாட்டித் தள்ளி விடமுயன்று
தண்டச் செயல்புரியும் அயல்நாட்டார்
அண்டை அயலாராய் ஒன்ற மனமின்றி
அழுக்குக் கலவரத்தின் நெடிஎங்கும்
அடிக்கும் பெருங்கொள்ளை உழைக்க மனமில்லை
அடவி நரிபுலிநாய் எலியான
இன்றை எமதுதுயர் தீர எடுத்தாளும்
இனிய திருவுளத்தின் எண்ணத்தால்
ஏற்ற பெரும்ஆற்றல் இனிய உள்ளங்கள்
எங்கும் அருள்புரிய வருவாயே -9

துன்று ஞானம் பேராற்றல்
துவ்ளா நிலையில் ஒன்றிடுமேல்
தோன்றும் மேன்மை உயிர்க்கென்ற
தொன்மை நெறியைக் காட்டற்கா
என்றும் யாவும் முற்றுணர்ந்த
எந்தை பெம்மான் எண்குணத்தன்
இதயக் கொலுவில் எழுந்தருளி
இருக்கும் எம்தாய் நீயன்றோ!
நின்ற சீரார் உன்னிலையில்
நெகிழ்ந்தே உயிர்மீ(து) இரக்கத்தால்
நீடும் அவனை நெஞ்சேந்தி
நேரில் ஐந்து தொழில்புரிவாய்!
அன்பார் அப்பன் உளம்நின்ற
அன்னை குங்கும சுந்தரிநீ
அடியோம் உளத்தும் குடிகொண்டுன்
அருளைத் தெளிக்க வேண்டுகிறோம். -10

திருச்சிற்றம்பலம்

## "குறிப்புரை"

பாடல் :1

உயிர், ஞாயிறு, திங்கள், ஐம்பூதம் - ஆக எண்வடிவு கொண்டவள் அன்னை என்பது மெய்ப்பொருளியல்

பாடல் :2

கிண்கிணி = காலில் அணியும் ஓர் அணி வகை
முரல = ரீங்காரமிட      தவளம் = ஒளி

பாடல் :3

காந்திமதி நாடிய ஆடெலாம் பெறும் அவனை - சந்திரசூடனை- அவள் அணைய ஒருசித்தரானவர் அருள்தரு திருமூலநாதர் என்பது தலபுராணவரலாறு   ஆடு = வெற்றி

பாடல் :4

முனிவர்களின் வேண்டுகோளுக்கிரங்கி அருள்தரு திருமூலநாதப் பெருமான், தன்கால் சிலம்பை எடுத்து வீச, அதுவிழுந்த இடத்தில் கங்கை பொங்கிப் பொன்னியுடன் கலந்து பங்குனியாய்ப் பெருகியது என்பது தலவரலாறு
புரிகின்ற = விரும்புகின்ற

பாடல் :5

நந்து அணை = சங்குகள் செறிந்த,  அந்தம் = முடிவு

பாடல் :6

இவண் = இங்கு - பூவாளூரில்,   குறி = குறிக்கோள்

பாடல் :7

இம்பர் = இவ்வுலகு  நளினம் = தாமரை

பாடல் :8

மன்னுவை = நிலைபெற்றிருப்பாய்.  அவனிகள் = உலகங்கள்
ஆர் = அருமையான.   நவை = குற்றம்

பாடல் :9

அடவி = காடு

பாடல் :10

துன்று = நெருங்கிய - செறிந்த



ராஜா அச்சகம், லால்குடி.

## பூவாளூர்

**வித்துவான் தியாகராச செட்டியார் இயற்றியவை**

ஆயாச் சிறியேனும் ஆய்ந்தபெரி யோர்உறும்பேறு
ஏயா மகிழநினை எய்தினேன்; - தூயா
மதியும் அரவுமுடி வைத்தாய்ஆ ரூர்வாய்
நிதியே அதனை நினைந்து

திருவாரூர்பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி -51

நாளே வினையே நமனே நவக்கோளே
கோளே புரியஎனைக் கூடன்மின்! - தானே
எனக்களித்தான் ஒற்றியூர் எம்பிரான் என்புன்
மனக்குள்இருப் பான்என்றும் வந்து

திருவாரூர்பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி -92

வெள்ளம் முடித்தசடை மெய்ம்மருந்து, நாயடியேன்
உள்ளப்பூங் கோயில் உறைமருந்து - கள்ளம்
இருவா உளத்தார்க்(கு) இனிக்கும்மருந்(து), இன்னல்
மருவாத ஆரூர் மருந்து.

-திருவாரூர் மருந்து வெண்பா மாலை -10

சிற்றம் பலத்தாடும் செல்வா, சிறியேன்செய்
குற்றம் பொறுத்தாள்வாய் கோமானே! - குற்றம்
பொறுப்பாயேல் பொல்லான் பொறுத்தான்என்(று) உன்னை
ஒறுப்பார் எவர்இங்(கு) உளர்?

-திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி -18

திருவாவடுதுறை ஆதீனம்

அருட்டிரு கச்சியப்ப முனிவரின் பூவாளூர்த் தலபுராணம்.

## அருள்தரு வெள்ளை வாரண விநாயகர்

(தலவிநாயகர்)

அள்இலைய ஞாங்கர்மழு வாதிகள்இ ருந்தும்
ஒள்உகிர்கண் ஆதியின்உ ருப்பகைக டந்த
வள்ளல்என வேஒரும ருப்பின்இகல் வென்ற
வெள்ளைமத வாரணம்என் மெய்வினைமு டிக்கும்

- பூவாளூர்த் தலபுராணம். பாயிரம்

## அருள்தரு திருமூலநாதப் பெருமான்

பொன்பூத்த மணிமார்பன் வளிஅழலும் கணையாகப்
புவிதே ராக
மின்பூத்த இருசுடரும் உருளாக் வெளிவழியா
விரைந்து கங்கைக்
கொன்பூத்த சடைதுளும்பப் பகைகடந்துஎண் வடிவும்ஒரு
கோல மெய்யின்
தென்பூத்த உறுப்பாக்கும் திருமூல நாதர்பதம்
சேர்ந்து வாழ்வாம்.

- பூவாளூர்த் தலபுராணம். பாயிரம்.

## அருள்தரு குங்கும சுந்தரி அம்மை

தங்கழல் அடுத்தவர்கள் நன்மைஇது போலத்
தங்குவர்கள் என்றுஉழை தரித்தவரொடு ஒப்பப்
பைங்கிளியை அங்கைகொடு பண்உரை பயிற்றும்
குங்குமச வுந்தரிதன் கோலம்நினை வாமால்

- பூவாளூர்த் தலபுராணம். பாயிரம்